# உழைப்பைத் திருடும் 'வெறி நாய்கள்'

REGD. No. M. 6311 PHONE No. 55630

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் ஆசிரியர்: அண்ணாதுரை

The "Nam Nadu": A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F

| | | |
|---|---|---|
| தனி இதழ்: ஒரு அணா<br>இலங்கையில் 10 சதம் | சென்னை: ஆவணித் 14உ திங்கள் (30—8—54)<br>வெளியூர்: ஆவணித் 15உ செவ்வாய் (31—8—54) | மலர்: 2<br>இதழ்: 66 |


## எந்த உருவில் வந்தாலும் ஒழிந்தே தீரும்

### தி. மு. க. லட்சியம் அதுதான்

மக்கள் அதன்மீது நம்பிக்கை கொண்டிருக்கிறார்கள்

நமக்கென்று சொந்த இடம் வேண்டும்

உடல் தேய உழைக்கிறோம்—வாழ முடியவில்லையே ஏன்?

திருவெண்ணெய்நல்லூரில் பொதுச்செயலாளர்

## அண்ணாதுரை பேச்சு

"இந்த நாட்டு மக்களுக்கு, நல்லதோர் வாழ்வு கிடைக்க வேண்டுமென்பதற்காகத்தான் தி. மு. கழகம் பணியாற்றி வருகிறது; எல்லாப் பிற்பட்ட வகுப்பு மக்களின் பிரதிநிதியாகவும் விளங்குகிறது!

"இந்த நாட்டு மக்களின் வாழ்வு எப்படியெல்லாம் மறிக்கப்படுகிறது என்பதை எண்ணிப் பார்த்து, திராவிட நாடு திராவிடர்க்கானாலன்றி வாழ்வு கிடைக்காது என்ற உண்மையை மக்களுக்கு விளக்கி வருகிறது;

"பந்தல் அமைக்க தென்னை ஓலை வேண்டும்; அது கீற்றாக முடையப்பட வேண்டும்; மூங்கில் வேண்டும்; கட்டுவதற்கு நார் வேண்டும்; உயர ஏற ஏணி வேண்டும்; பந்தலை அமைக்கும் திறம் வேண்டும்; இத்தனைக்கும் மேலாக பந்தல் போட ஒரு சொந்த இடமும் வேண்டும்;

'திராவிட நாடு காண்பது என்பதும், அத்தகையது போன்றதே! சமுதாயம் அறிவுத் தெளிவு பெற வேண்டும்; அறிவு பெற்ற சமுதாயம் நல்ல பொருளாதார திட்டத்தைப் பெற்றிருக்க வேண்டும்; அந்தத் திட்டங்களை நிறைவேற்றி, மக்கள் வாழ்வு பெற, அரசியல் அதிகாரம் வேண்டும்;—இதுதான், 'திராவிட நாடு திராவிடருக்காக வேண்டும்,' எனும் தி. மு. கழக லட்சிய விளக்கம்!

'உலகத்தில் உள்ள வேறெல்லா மக்களையும்விட தென்னாட்டவராகிய நாம்தான் அதிகமாக உழைக்கிறோம்; என்றாலும், நமக்கு மூன்று வேளை உண்ணப் போதுமான உணவு கிடைப்பதில்லை; உடுத்துவதற்குத் தேவையான உடை கிடைக்கவில்லை; ஒண்டுவதற்குக் குடிசை இல்லை; ஏன் இந்த நிலைமை?

"இந்தக் கேள்வியைத்தான் தி. மு. கழகம் நாட்டு மக்களைப் பார்த்துக் கேட்கிறது! திருநீறு பூசியவர்களையும், திருநாமம் இடுபவர்களையும் கேட்கிறது! கதர்ச் சட்டைக்காரர்களையும், கம்யூனிஸ்டு கன்னர்களையும் கேட்கிறது! உழைப்பாளர் கட்சியையும் ஊராளும் ஆட்சியாளர்களையும் கேட்கிறது!

"இந்த நாட்டு மக்கள் உடல் தேய உழைக்கிறார்கள்; என்றாலும், வாழ முடிவதில்லை; ஏன்?

"அவன் ஏன் பட்டினி?—என்றால், அவன் உழைக்காத சோம்பேறி; அதனால்தான் பட்டினி—என்றால், அதில் அர்த்தமுண்டு! நிலம் ஏன் விளையவில்லை?—என்றால், அது ஒரே களர் நிலம்; அதனால்தான்—என்றால், அதில் பொருள் உண்டு! ஆனால், உழைத்து உழைத்து உடல் கருத்துப்போன மக்களால் வாழ முடியவில்லை என்றால்—ஏன்?

"அதோ தெரியும் கோவில்களும், கோபுரங்களும், திருக்குளங்களும் உழைத்ததின் பலன்! செஞ்சிக்கோட்டை இந்த நாட்டு மக்கள் உழைத்து அமைத்தது!

"இப்படி எப்பொழுதும் உழைத்துக்கொண்டே இருப்பவர்கள் வாழ முடியவில்லை என்றால், அதற்குக் காரணம் என்ன?

"சாப்பாடு முன்னே இருக்கிறது; சாப்பிட முடியவில்லையென்றால் என்ன பொருள்? அவனைச் சாப்பிடவிடாது அவன் கண், கருப்புத் துணியால் கட்டப்பட்டு, கைகளும் கயிற்றால் பின்பக்கம் பிணைக்கப்பட்டிருக்க வேண்டும்; அந்த உணவை உண்ண விடாது வெறிநாய் உறுமிக்கொண்டிருக்க வேண்டும்—இல்லையா?

"அதைப்போலவே உழைக்கிறோம்; ஆனால் உழைப்பின் பலனை அனுபவிக்க முடியாதவர்களாயிருக்கிறோம்! எமது உழைப்பை அனுபவிக்க விடாமல் யாரோ சில வெறி நாய்கள் எம் உழைப்பைத் திருடிக்கொண்டிருக்கின்றன என்பதுதானே பொருள்?

அப்படி இந்த நாட்டு மக்களின் உழைப்பை, மதத் துறையில் உள்ள வெறி நாய்களும், பொருளாதாரத் துறையில் டாட்டா, டால்மியா ரூபத்திலும் பலர் திருடிக்கொண்டிருக்கிறார்கள்.

எனவேதான், தி. மு. கழகம், இந்த நாட்டு மக்களின் உழைப்பைத் திருடும் வெறி நாய்களை அடித்துத் துரத்த வேண்டும் என்

(4-ம் பக்கம் பார்க்க)

# தனி மனிதனுக்காக ஒரு சமூகமே பலியிடப்படுவது நியாயமா?

## மந்திரியான ராமசாமியார் வன்னியருக்கு செய்த நன்மைகள் என்ன?

### திருவெண்ணெய் நல்லூரில் கோவிந்தசாமி, எம். எல். ஏ. முழக்கம்

திருவெண்ணெய்நல்லூர், ஆக. 28—

திருவெண்ணெய்நல்லூர் தி. மு. கழக முதலாண்டு விழா பொதுக் கூட்டம் தோழர் டி. சி. சுந்தரம் தலைமையில் நடைபெற்றது.

தோழர்கள் அ. பொன்னம்பலனார், ஏ. கோவிந்தசாமி எம். எல். ஏ., தி. மு. கழகப் பொதுச் செயலாளர் சி. என். அண்ணாதுரை ஆகியோர்களது சொற்பொழிவாற்றினர்.

பொதுச் செயலாளரின் வருகையை முன்னிட்டு நகர் எங்கும் வரவேற்பு வளைவுகளால் தோரணங்களாலும், கழகக் கொடிகளாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது.

பொதுச் செயலாளர் அண்ணாதுரை அவர்கள் மாலை சுமார் 6-30 மணிக்கு திருவெண்ணெய்நல்லூர் வந்தடைந்ததும், நாதஸ்வர இன்னிசையுடன் வரவேற்கப்பட்டார்கள்.

கூட்டத்திற்குப் பல்லாயிரக்கணக்கான மக்கள், பலமைல் தொலைவிலிருந்தெல்லாம் வந்திருந்தனர்.

பல்வேறு கிளைக் கழகங்கள், சங்கங்கள் சார்பாக பொதுச் செயலாளர் அவர்களுக்கு மலர் மாலைகளும், வரவேற்பு இதழ்களும் வாசித்தளிக்கப்பட்டன; கைத்தறி ஆடைகளும் பல போர்த்தப்பட்டன.

தலைமை தாங்கிய தோழர் டி. சி. சுந்தரம் அவர்களின் தலைமையுரைக்குப் பின், தோழர் அ. பொன்னம்பலனார் அவர்கள் பேசுகையில் குறிப்பிட்டதாவது:—

"மனிதன் மனிதனாக மதிக்கப்பட வேண்டும்; மனிதருள் உயர்ந்தவன் - தாழ்ந்தவன் என்ற பேதாபேதம் கூடாது; இன்று, இந்த நாட்டு மக்கள், பல துறைகளிலும் அடிமைகளாய், சுதந்திர உணர்வே அற்றுப்போனவர்களாய் இருக்கிறார்கள்; இந்த நிலை மாறப்பட்டு, தென்னாட்டு மக்கள் சுதந்திரம் பெற்றவர்களாய் வாழ வேண்டுமென்பதே தி.மு. கழகத்தின் இலட்சியம்;

"சமுதாயத் துறையில் இருக்கும் உயர்ந்தவன் - தாழ்ந்தவன் என்னும் பேதம் நீங்கி, எல்லோரும் ஓர்குலம் எனும் நிலையும், பொருளாதாரத் துறையில், தன் செல்வங்கள் பிறரால் சுரண்டப்படும் நிலை மாறி, தன்னாளுங்கள் தனக்குப் பயன்படுமாறு செய்து கொள்ளவும், அரசியல் துறையில் டெல்லியிடம் அடிமையாயிருக்கும் நிலைமாறி, தனி அரசு பெற்றவர்களாய் வாழ வேண்டும் என்பது தான் நம் இலட்சியம்."

அடுத்து, ஏ. கோவிந்தசாமி எம். எல். ஏ., அவர்கள் பேசியதாவது:—

"இன்று மக்களுக்குத் தந்த வாக்குறுதியை காற்றில் பறக்க விட்டுவிட்டு மந்திரியாகி இருக்கிற ராமசாமி படையாச்சியாரும் நானும், முன்பு, அவர் உடலாகவும் நான் நிழலாகவும் இருந்தது உங்களுக்குத் தெரிந்திருக்கலாம்.

இன்று மந்திரியாகி உள்ள அவர் கூறுகிறார் — வன்னிய மக்களுக்கு நன்மை செய்வதற்காகவே மந்திரியாகி இருப்பதாக!

அதனாலேயே உழைப்பாளி கட்சியையும், கலைத்துவிடுகிற முறையில் காரியங்கள் செய்திருக்கிறார்!

பதவி, இன்னும் 3 மாதமோ அன்றி 3 வருடமோ இருக்கலாம். அதற்காக ஒரு நல்ல கட்சியையே கலைத்துவிடத்தான் வேண்டுமோ?

ஒரு மந்திரி பதவிக்காக, பிற்பட்ட மக்களின் நன்மைக்காகத் தோன்றிய ஒரு பெரும் கட்சியே பலியிடப்படலாமா? நியாயமா?

ஜில்லா போர்டு தேர்தலில்

(4-ம் பக்கம் பார்க்க)

# ஜில்லா போர்டு தேர்தல்

## உழவர்கட்சி அபேட்சகர்களை தி.மு.கழகத்தினர் ஆதரிப்பர்

### பொதுச்செயலாளர் அறிவிப்பு

தி. மு. கழகப் பொதுச்செயலாளர் சி. என். அண்ணாதுரை அவர்கள் 28—8—54 அன்று திருவெண்ணெய்நல்லூர் தி. மு. கழக முதலாண்டு விழாவில் பேசுகையில் குறிப்பிட்டதாவது:—

"கடந்த பொதுத் தேர்தலில், கோயங்கா போன்ற பெரும் பண முதலைகளை எதிர்த்து வெற்றி பெற்ற கோழிச் சின்னமுள்ள பெட்டிகள் வருகிற ஜில்லா போர்டு தேர்தலில் இருக்காது! மாறாக, அத்தனையும் மாட்டுப் பெட்டிகளாக மாற்றப்பட்டு விட்டன—கனம் ராமசாமி படையாச்சியாரால்!

"உழைப்பாளர் கட்சியினரின் போக்கால் நாங்கள் ஏமாற்றப்பட்டோம்! எங்களுக்கு ஏற்பட்ட ஏமாற்றம்கூடப் பெரிதல்ல; ஏனெனில், அரசியல் வாழ்விலே அத்தகைய ஏமாற்றங்கள் பலவற்றை நாங்கள் சந்தித்துவிட்டிருக்கிறோம்!

"ஆனால், ஒரு பெரும் சமூகத்திற்கு நேர்ந்த ஏமாற்றம்தான் மிகப் பெரியது. அந்த மக்கள் உண்மையிலேயே ஏமாற்றப்பட்டு விட்டார்கள். அவர்களுக்கு நேர்ந்துள்ள ஏமாற்றம் எத்தகையது என்பது குறித்து நண்பர் கோவிந்தசாமி விளக்கமாகப் பேசியுள்ளார்.

'அந்த ஏமாற்றத்தின் காரணமாக, மனம் உடைந்த தோழர் கோவிந்தசாமி போன்றவர்கள், புதியதோர் கட்சியை, உழவர் கட்சி என்ற பெயரில் இந்த தென் ஆற்காடு மாவட்டத்தில் துவக்கி உள்ளனர்

"அவர்கள் வருகிற ஜில்லா போர்டு தேர்தலில் போட்டியிடுகிறார்கள். அந்தக் கட்சி நிறுத்தியுள்ள அபேட்சகர்களை இந்த மாவட்டத்தில் உள்ள தி. மு. கழகத்தவர் ஆதரிப்பார்கள்."

Best copy available.

# நம் நாடு

தி.மு.க.தின் இதழ் ஆசிரியர்: அண்ணாதுரை

சென்னை 30—8—54 திங்கள்


# நேரம் நெருங்குகிறது!

நாள்தோறும் புதிய தி. மு. கழகங்களின் துவக்க விழாக்கள் நடைபெறுகின்றன!

உறுப்பினர் எண்ணிக்கை வளர்ந்த வண்ணமிருக்கிறது!

நீண்ட காலமாக கழகத்திலே பணியாற்றி வரும் தோழர்கள் புதிய நம்பிக்கை பெறுகிறார்கள்!

நாட்டிலே நம்மைப் பற்றிய பேச்சு அனுதினமும் நடைபெறுகிறது!

அரசாங்க மாளிகை முதல் தங்கள் வாழ்வுக்கு ஆதரவு கிடைபாதா என்று ஏங்கியிருப்போர் வரை, நாம் என்ன செய்யப்போகிறோம் என்று எதிர்பார்க்கிறார்கள்!

'திராவிட முன்னேற்றக் கழகம் ஒரு நல்லதோர் ஜனநாயக அமைப்பு! நாட்டின் நலிவைப் போக்கி, திராவிடர்களை ஒரு உன்னத சமுதாய அமைப்பை நோக்கி அழைத்துச் செல்கிறது,' என்ற எண்ணம், அனைவர் மனதிலும் வேரூன்றி வருகிறது!

நாம் வளர்கிறோம்; திராவிட முன்னேற்றக் கழகம் வெற்றிப் பாதை நோக்கிச் செல்கிறது!

திராவிட முன்னேற்றக் கழகம் வளர்வது கண்டு பெருமைப்படுவோர் பலர் உண்டு; அதுபோலவே, அதன் வளர்ச்சியைக் கண்டு அச்சமுறுவோரும் இருக்கத்தான் செய்கிறார்கள்!

நமது வளர்ச்சி, சிலருக்கு பொறாமை உணர்ச்சியைத் தூண்டிவிடுகிறது. அதன் காரணமாக நம்மைப் பலர், வீணர்கள் என்று வசை பாடுகிறார்கள். காலப்போக்கையும், நமது நாட்டிலே காணப்படும் இழிநிலைகளையும் காண மறுப்பவர்கள், நம்மீது தொடுத்த பாணங்கள் ஏராளம்!

'கலகக்காரர்கள்', 'பிரிவினை மனப்பான்மை கொண்டவர்கள்', 'நாத்திகர்கள்'—என்று பேசியோர் உண்டு!

பழமையின் ஆதிக்கம் மறைவது கண்டு மனம் பொறாது, நம்மீது பொல்லாங்கு கூறினோர்கள்!

அரசியல்வாதிகள் என்றும், கருத்துத் தெளிவின்மையால், திராவிட முன்னேற்றக் கழகத்தின்மீது அடுக்கடுக்காகக் குற்றம் சாட்டுவோரும் இருந்தார்கள்—இருக்கிறார்கள்!

வேண்டுமென்றே நம்மை வம்புக்கிழுத்து, கழகத்தின் வளர்ச்சியைத் தடை செய்ய எண்ணினோர்கள், பலர்!

ஒற்றுமை கீதம் பாடினால் ஓய்ந்துவிடுவார்களா என்று எதிர்பார்ப்போரும் இருக்கத்தான் செய்கிறார்கள்!

பொதுவாகச் சொல்ல வேண்டுமென்றால், நாட்டிலே தி. மு. கழகத்தைப் பற்றி பட்டிதொட்டி எங்கும் பேசுகின்றனர்; அதன் திட்டத்தைப்பற்றி விவாதிக்கின்றனர்; நன்னெண்ணத்துடன் எழுதுவோர் பாராட்டுகின்றனர்; தீய நோக்கம் கொண்டோர், தெளிவு பெறாத மனப்பண்பு கொண்டோர் அளவுக்கு மீறிய வார்த்தைகளால் நம்மீது வசைமாரி பொழிகின்றனர்!

ஆனால், எதிர்ப்போர் உள்ளங்கள் கண்டு வியக்கும்படி தி. மு. கழகம் வளர்ந்தோங்கியிருக்கிறது. கூட்டங்கள் நடைபெற்றால், திராவிட முன்னேற்றக் கழக முன்னணி வீரர்கள் பேசுகிறார்கள் என்றால், ஆயிரக்கணக்கிலே மக்கள் கூடுகிறார்கள்!

தி. மு. கழக மாநாடு என்றால், பல்லாயிரக்கணக்கில் மக்கள் கூடுகிறார்கள்; மாநாடு நடைபெறும்போது அந்தப் பகுதியிலே புதியதோர் உணர்ச்சி காணப்படுகிறது!

முன்பெல்லாம், திருவிழாவில்தான் மக்கள் ஆயிரக்கணக்கில் கூடுவார்கள்; ஆண்டவன் புகழ் பாடுவார்கள்; கலைந்துவிடுவார்கள்!

திருவிழாவிற்குச் சென்ற மக்கள் கருத்துத் தெளிவு பெற்றார்களா, அறிவு வளர்ச்சிக்கான முறைகள் என்னென்ன என்பதை தெரிந்து கொண்டார்களா என்றால், எதுவும் இருக்காது; பகவான் மீதுள்ள பழைய பாடல்களை, புதிய ராகத்தில் பாடி மகிழ்ந்திருப்பார்கள்; அவ்வளவுதான்!

இப்போதும் சில இடங்களில் திருவிழாக்கள் நடைபெறுகின்றன; ஆனால், அங்கே கூடும் மக்கள் ஆண்டவன் மீதுள்ள அன்பின் காரணமாகக் கூடுவதில்லை; விழாவில் உள்ள கலைக் காட்சிகளைக் கண்டு ரசிக்கவும், கடைகளிலே விற்கும் பொருள்களை வாங்கவும்தான் கூடுகிறார்கள்!

தி. மு. கழகத்தினர் நடத்தும் மாநாடுகளிலே மக்கள் கூடுகின்றனர் என்றால், அதன் பயன் அளவிட முடியாதது. மாநாட்டிற்கு வரும் கழகத் தோழர்கள், அங்கே புதிய உணர்வு பெறுகிறார்கள்; அங்கே திரண்டிருக்கும் மக்களைக் காணும்போது பெருமைகொள்கிறார்கள்; புதிய போராட்டங்களை நடத்தத் திட்டமிட விரும்புகிறார்கள்!

திராவிட நாடு பிரிவினை வேண்டும் என்கிற அவர்கள் ஆர்வம், இன்னும் பன்மடங்கு உயர்கிறது.

'நாம்' என்பது எவ்வளவு பெரிய படையைக் குவிக்கிறது என்பதை எண்ணும்போது, அவர்கள் புதிய நம்பிக்கை பெறுகின்றனர்!

'இப்படை தோற்கின் எப்படை ஜெயிக்கும்,' என்று கேட்கிறார்கள்!

தி. மு. கழக மாநாடுகள், கழகம் இதுவரை செய்த நல்ல பல காரியங்களையும், இனி செய்யவேண்டிய பல காரியங்களையும் ஆராயும் ஆராய்ச்சிக்கூடங்களாக விளங்குகின்றன!

இப்படிப்பட்ட கழக மாநாடுகள் மாவட்டந்தோறும் நடைபெறுகின்றன!

சென்ற வாரத்தில் காஞ்சிபுரத்தில் நடைபெற்ற மாநாடுகள், நல்ல முறையில் நடைபெற்றன; இதுவரை நடைபெற்ற மாவட்ட மாநாடுகளைப் போன்று, சிறந்த முறையில் நடைபெற்றன.

செங்கற்பட்டு மாவட்டக் கழகத்தினர் நடத்திய அந்த மாநாடுகளில் பல்லாயிரக்கணக்கில் மக்கள் கூடியிருந்தனர்; திராவிட முன்னேற்றக் கழகத்தினர், மக்களின் காவலர்கள் என்பதை அந்த மாநாடுகள் எடுத்துக் காட்டின!

ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக அடிமைப்பட்டுக் கிடந்த இந்தச் சமுதாயத்தைத் தட்டி யெழுப்பிய பெருமை, சமுதாயத்திலே ஏற்றத்தாழ்வுகள் நிறைந்து இருக்கும்போது அரசியல் முன்னேற்றத்தால் பலன் ஏதும் இல்லையாதலால், சமுதாய சீர்திருத்தமே அரசியல் விழிப்பின் விடிவெள்ளி என்பதை இந்த நாட்டில் எடுத்துச் சொல்லிய பெருமை திராவிட இயக்கத்தைச் சார்ந்ததாகும்!

காஞ்சிபுரத்தில் முதல் நாள் நடைபெற்ற சமூக சீர்திருத்த மாநாடு, சமுதாய மறுமலர்ச்சி எவ்வளவு அவசியமானது என்பதை எடுத்துக் காட்டியது!

இரண்டாம் நாள் நடைபெற்ற அரசியல் மாநாடு, திராவிடத்தின் வாழ்வுக்கும் [illegible] காட்டும் இடமாகக் காட்சியளித்தது!

ஓராண்டிற்கு முன்னர், குலக் கல்வித் திட்டம் நாட்டிலே புகுத்தப்பட்டபோது, தி. மு. கழகம் அதை எதிர்த்தது; மக்கள் சக்திக்குத் தலைவணங்க மறுத்த சர்க்கார், அடக்குமுறையை அள்ளி வீசியது; அந்த அடக்குமுறையை எதிர்த்துப் போராடியவர்களுக்கு காஞ்சி மாநாட்டிலே கூடியவர்கள் நன்றி செலுத்தியிருக்கிறார்கள்; அவர்கள் தியாகத்திற்கு வீரவணக்கம் செலுத்தியிருக்கிறார்கள்!

அன்று போராடினோம்; வெற்றி பெற்றோம்; இன்று திருவாங்கூர்—கொச்சியில், நமது மக்கள் அடக்குமுறைகளுக்கு ஆளாகப்பட்டிருக்கிறார்கள்; அங்கு நடைபெறும் அறப்போரில் தி. மு. கழகத்தினர் பங்கு கொண்டார்கள்; 110 பேர் சிறை சென்றார்கள்!

உரிமை வேண்டுமென்று கோரும் மக்களைக் கொடுமைப்படுத்தும் பட்டம் தாணுவின் சர்க்கார் போக்கையும், பட்டம் தாணுவின் பொறுப்பற்ற பேச்சுகளையும் போலீஸ் ஆட்சியையும் கண்டு வாளாயிருக்கும் டில்லி சர்க்காரையும் கண்டித்து மாநாட்டிலே கூடியோர் நல்ல பாடம் கற்பிக்கும் முறையில், தீர்மானங்கள் நிறைவேற்றியிருக்கின்றனர்.

திருவிதாங்கூர் தமிழர்களின் அறப்போரில் அமைதியான முறையில் கழகத் தோழர்கள் கண்ணியத்துடன் நடந்து கொண்டிருக்கிறார்கள். தி. மு. கழகம் ஒரு ஜனநாயக அமைப்பு என்பதையும், ஒழுங்குடனும் கட்டுப்பாட்டுடனும் வளர்ந்துள்ள கழகம் என்பதையும் எடுத்துக் காட்டியிருக்கின்றனர்.

ஆனால், திருவிதாங்கூரிலிருந்து வெளியாகும் 'தினமலர்' என்னும் இதழ், தி. மு. கழகத்திற்கு மாசு கற்பிக்கும் முறையில், 'தி. மு. கழகம், பலாத்காரத்தில் நம்பிக்கையுடையது,' என்று பொறுப்பற்ற முறையில் கூறியிருப்பதை காஞ்சி மாநாடு கண்டித்திருக்கிறது.

நம்மீது களங்கம் கற்பிக்க எண்ணும் அந்த இதழின் மீது, ஏன் இன்னும் நடவடிக்கை எடுக்கவில்லை என்பதை காஞ்சி மாநாட்டில் கூடியோர் எடுத்துக் காட்டியுள்ளனர்.

அடக்குமுறை, திரு—கொச்சியில் மட்டுமல்ல; பிரெஞ்சிந்தியத் திட்டுக்களிலும் நடைபெறுகிறது. அன்னிய ஏகாதிபத்தியம் நமது நாட்டில் இருந்து வெளியேற மறுக்கும் போக்கைக் கண்டித்து, காஞ்சி மாநாட்டில் தீர்மானம் நிறைவேறியிருக்கிறது.

லால்குடி மாநாட்டில், சென்ற ஆண்டு நிறைவேற்றிய தீர்மானத்தை ஒட்டி, கவர்னரின் சம்பளம் பற்றி நடவடிக்கை எடுக்க தி. மு. கழகம் பொதுக் குழுவைக் கூட்ட வேண்டுமென தீர்மானத்தை காஞ்சியில் கூடிய கழகத் தோழர்கள் நிறைவேற்றியிருக்கின்றனர். 'ஏழைகள் நிறைந்த இந்த நாட்டிலே ஏன் இந்த அநீதி? ஜனநாயகம் என்ற பெயரிலே வரிப்பணம் பாழாகிறது; அது தடுக்கப்பட வேண்டும்,' என்பதுதான் அத்தீர்மானத்தின் நோக்கம்.

நல்ல பல தீர்மானங்களை நிறைவேற்றிய காஞ்சி மாநாடுகள், அங்கே திரண்டிருந்த கழகத் தோழர்களுக்கு அவர்களின் கடமை என்னவென்பதை எடுத்துக் கூறிவிட்டிருக்கின்றன.

"அறப்போருக்கு நாங்கள் தயார்; அழைப்பு கிடைத்ததும் ஆயிரக்கணக்கில் வருவோம்," என்ற குதூகலமுடன் ஊர் திரும்பினார்களே, காஞ்சி வந்தவர்கள்!

தாய்நாட்டு விடுதலைப் போரில் தங்கள் பங்கு என்ன என்று கேட்டு, துடித்த உள்ளத்துடன் இருக்கும் எண்ணற்ற கழக காளைகளுக்கு, காஞ்சி மாநாடுகள் கருத்து விருந்தளித்து, [illegible] சமுதாய முன்னேற்றத்திற்குத் தங்களை அர்ப்பணிக்க வேண்டும் என்ற உணர்ச்சியை அளித்திருக்கிறது.

திராவிட நாடு பிரிவினைக்கான போருக்கு, காலம் அதிக தூரத்தில் இல்லை; அதற்கான நேரம் நெருங்கிவருகிறது என்பதை, காஞ்சிபுரத்தில் நடந்த மாநாடுகள் நன்கு எடுத்துக் காட்டின—நம்பிக்கையூட்டின!

# நீண்ட காலமாகவே மனக்கசப்பு வளர்ந்து வந்திருக்கிறது

## தமிழருக்குரிய நேர்மையான பங்கு அளிக்கப்படவில்லை

### திரு—தமிழர் நிலைபற்றி தமிழர் பேரவை அறிக்கை

சென்னைத் தமிழர் பேரவைத் தலைவர் திரு. கசபதி சம்பந்தி, செயலாளர் சி. ஆ. பெ. விசுவநாதம், உறுப்பினர் சம்பந்தம் ஆகியோர் திரு—கொச்சி மாநிலத்தின் வழியும் தமிழர் பிரச்சினை குறித்து நேரில் கண்டறிந்து வருவதற்காக திரு—கொச்சி தமிழ்ப் பகுதிகளில் கடந்த ஆக 15-ந் தேதி முதல் 18-ந் தேதிவரை சுற்றுப் பயணம் செய்துவிட்டுத் திரும்பியுள்ள அந்த விசாரணைக் குழுவினர் வெளியிட்டுள்ள அறிக்கையின் சாரம் கீழே தரப்படுகிறது.

விசாரணைக் குழுவினர் இருப்பிடம், திரு—கொச்சி முதன் மந்திரி பட்டம் தாணுப்பிள்ளை, திரு—தமிழர் காங்கிரஸ் தலைவர் நேசமணி எம். பி. ஆகியோர் உள்ளிட்ட பல தலைவர்களையும் சந்தித்து கருத்துக்களைச் சேகரித்திருக்கின்றனர்:—

"தோவாளை, அகஸ்தீஸ்வரம், கல்குளம், விளவங்கோடு (தெற்கு), நெடுமங்காடு (தெற்கு), தேவிகுளம், பீர்மேடு, சித்தூர், செங்கோட்டை ஆகிய பத்து தாலுகாக்கள் மிகப் பெரும்பான்மை தமிழ் பேசும் பகுதிகளாயிருக்கின்றன.

மன்னர்கள் கையிலிருந்த திரு—கொச்சி ஆட்சி, மக்கள் பிரதிநிதிகளின் கைக்கு மாறியது பெரும் முற்போக்கான நடைமுறையே என்றாலும், திரு—கொச்சி மாநிலத்தில் சிறுபான்மையினரான தமிழ் பேசும் மக்களைப் பற்றிய மட்டில் அதன் பலன் மிகவும் விபரீதமாகவே இருந்திருக்கிறது. அதுமுதல் இரண்டு வகுப்பினருக்கும் இடையில் உள்ள தொடர்பு படிப்படியாக மனக்கசப்பை வளர்த்து மோசமாகிக் கொண்டேதான் வந்திருக்கிறது என்று கூறவேண்டும்.

நாட்டின் பொது ஊழியத் துறையில் தமிழருக்குரிய நேரிய பங்கு அவர்களுக்கு மறுக்கப்பட்டு வருகிறது என்பதும், பொருளாதாரத் துறையிலும், இன்னபிற துறைகளிலும் மாற்றாந்தாய் மனப்போக்கு நீடித்திருக்கிறது என்றும் தமிழர் சார்பில் கூறப்படுகிறது.

தங்களுக்கு இழைக்கப்படும் அநீதியின் காரணமாகவும், மனக் கசப்பின் காரணமாகவும், சென்னை மாநிலத்துடன் இணைய வேண்டும் என்ற திரு—த. நா. காங்கிரசின் கோரிக்கைக்கு மக்கள் அமோக ஆதரவு தந்துள்ளனர்.

அதே சமயம் மலையாளம் பேசும் மக்களுக்கிடையே இந்த இணைப்புக்கு எதிர்ப்பு வளரத் தொடங்கியிருக்கிறது.

மற்ற எல்லா இடங்களைப் போலவேயும் கம்யூனிஸ்ட்கள் இந்த இணைப்பு இயக்கத்திற்கு ஆதரவு தந்திருக்கிறார்கள். ஆனால் அவர்கள் கூட இந்த இடத்தில் தொழிலாளர் வாழும் பகுதியை இணைப்புத் திட்டத்தில் சேர்க்காமல் விலக்குவதில் குறியாயிருக்கின்றனர்.

(4-ம் பக்கம் பார்க்க)



# கழகச் செய்திகள்

## மணிமுத்தாறு அணையில் தி. மு. க. துவக்க விழா

19—8—54ல், கல்லிடைக்குறிச்சியை அடுத்த மணிமுத்தாறு அணையில் வேலை பார்க்கும் தொழிலாளர்கள் சார்பில், தி. மு. கழகத் துவக்க விழாப் பொதுக் கூட்டம் நடைபெற்றது. தோழர் சு. கந்தசாமி தலைமை வகித்தார். தூத்துக்குடி தோழர்கள் எம். ரத்தினம், இராசு தங்கப்பழம் ஆகியோர் கழகக் கொள்கைகளை விளக்கிப் பேசியபின், வழக்கறிஞர் இரெ. இளம்வழுதி கம்யூனிஸ்டுகளின் கொள்கைக்கும், தி. மு. க.-வின் கொள்கைக்கும் உள்ள வேறுபாடுகளை விளக்கியும், தொழிலாளர் நிலையில் தி. மு. க.-வின் கருத்து பற்றியும் விரிவுரையாற்றினார்.

## ஏழுமலையில் தி. மு. க. அமைப்பு

15—8—54ல், தோழர் என். அன்பரசன் தலைமையில் கழகம் அமைக்கப்பட்டு, நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்: செயலாளர்: எஸ். ஆர். ராசன்; துணைச் செயலாளர்: கே. ஆனந்தகிருஷ்ணன்; பொருளாளர்: கே. இராமசாமி; அமைப்பாளர்: கே. கோபால்; விளம்பர உறுப்பினர்: என். அன்பரசன்; மாவட்டப் பிரதிநிதி: கு. ராமசிவம்; மற்றும் 21 பேர் கொண்ட செயற்குழு அமைக்கப்பட்டது.

## பம்பாய்—பொய்சேர் 4-வது தி. மு. க. கிளை

15—8—54ல், தோழர் அ. சே. அருணாசலம் தலைமையில் நடைபெற்ற உறுப்பினர் கூட்டத்தில், நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்: செயலாளர்: ச. ஆ. ராமசாமி; துணைச் செயலாளர்: கே. என். என். ராசு; பொருளாளர்: டி. ஈசாக்; பொதுக்குழு பிரதிநிதிகள்: கே. ஆர். பொன்னுசாமி, க. ப. முத்தையா; செயற்குழு உறுப்பினர்கள்: சி. ரா. ஆதிவீரன், பி. பி. மூக்கையா, ரா. சஞ்சீவி, கே. பி. தேவதாஸ், கே. ஏ. முத்தையா, எம். தர்மராஜ், என். மோசஸ், ம. சிசில், கே. பொன்னுசாமி, கே. என். சுப்பையா, என். எஸ். மாணிக்கம், ஆ. ராமையா, எஸ். என். முத்தையா, வி. எஸ். பொன்னையா, அ. சே. அருணாசலம்.

## தி. மு. கழக அமைப்புக் கூட்டம்

அம்மையப்பன், ஆக. 24—

20—6—54ல் மழையூர், கிருஷ்ணபுரம், அத்திசேரமங்கலம் கிராமங்களில், தி. மு. க. அமைப்புக் கூட்டமும், கொடியேற்று விழாவும் நடைபெற்றது; அபிவிர்த்தீஸ்வரம் ச. நடராசன் கொடியேற்றி வைத்தார். அம்மையப்பன் தோழர்கள் கழகத்தை அமைத்துத் தந்தனர்; பின்னர் நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்: செயலாளர்: டி. [illegible]ராசன்; துணைச் செயலாளர்: ஆர். நாராயணசாமி; மாவட்டப் பிரதிநிதி: எம். மணி; பொருளாளர்: எம். சின்னையன்; மற்றும் 7 பேர் செயற்குழு உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## அக்கிசெட்டிபாளையம் தி. மு. கழகம்

24—8—54ல், கழகச் செயற்குழு கூட்டம் செயலாளர் ஏ. அண்ணாமலை தலைமையில் நடைபெற்றபோது, தோழர் வி. கந்தசாமி உறுப்பினர் பதவியிலிருந்து விலகுவதை ஒப்புக் கொள்ளப்பட்டது. பின்னர், சில தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## கணபதிபாளையம் தி. மு. கழகம்

உடுமலை வட்டம் கணபதிபாளையம் தி. மு. கழகச் செயற்குழு கூட்டம் 20—8—54ல், வீராசு தலைமையில் நடைபெற்றபோது, திரு-கொச்சியில் நடைபெற்ற துப்பாக்கிப் பிரயோகத்தைக் கண்டித்தும், பலியான தோழர்களுக்கு அனுதாபம் தெரிவித்தும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## வடபாகம் தி. மு. கழகம்

பாளையங்கோட்டை, ஆக. 28—

15—8—54 மாலை 6 மணிக்கு சந்திரா நிலையத்தில் கழக உறுப்பினர்கள் கூட்டம் நடைபெற்றபோது, நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்:— செயலாளர்: ஆர். இரத்தினம், பொருளாளர்: பொ. அகலச்செல்வன், மாவட்டக் கழகப் பிரதிநிதிகள்: ஆ. மீ. அலிசேக் மன்சூர், பாலவேலன், இரா. வெற்றிச்செல்வம்; செயற்குழு உறுப்பினர்களாக 9 பேர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## உசிலநகர் தி. மு. க.

8—8—54ல், கழகப் பொது உறுப்பினர் கூட்டம் நடைபெற்றது. இடைக்காலத்திற்காக புதிய செயற்குழுவினர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்: செயலாளர்: என். இராமசாமி; துணைச் செயலாளர்: கே. என். பெயதேவர்; விளம்பர உறுப்பினர்கள்: பி. சிவஞானம், வீரசேகரன்; மாவட்டப் பிரதிநிதி: எம். பி. பாண்டியன்; பொருளாளர்: என். சொக்கலிங்கம், செயற்குழு உறுப்பினர்கள்: வி. சுப்பிரமணியம், தங்கதம்பி, பாலசுப்பிரமணியம், என். மாணிக்கம், கார்த்திகேசபி, இ. கே. குருசாமி, க. ம. வீரணன்.

• • •

15—8—54ல் நடைபெற்ற செயற்குழு கூட்டத்தில் திரு—தமிழர் போராட்டத்தில் உயிர் நீத்த தோழர்கட்கு அனுதாபம் தெரிவித்தும், கழக அலுவலகம் திறக்கத் தீர்மானித்தும், அதற்கென்று ஒரு குழுவும் அமைக்க ஏற்பாடாயிற்று.

## கும்மிடிபூண்டி தி. மு. க.

22—8—54 மாலை 4 மணியளவில் செயற்குழு தேர்வு தோழர் கு. இராசமாணிக்கம் தலைமையில் நடைபெற்றபோது நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்: செயலாளர்: ப. சே. அய்மணி; துணைச் செயலாளர் ஏ. இராதாமணாளன்; பொருளாளர்: ந. கோ. மணாளன்; மாவட்டப் பிரதிநிதி: ஆ. கிருஷ்ணன்; விளம்பர செயலாளர்: தி. க. அருணாசு; செயற்குழு உறுப்பினர்கள்: கு. இராசமாணிக்கம், ஏ. பே. கணேசன், ஓ. மு. அறுமுகம், இராமசாமி, ஜெ. சண்முகம், சி. துரை அரசு.

## பம்பாய்-சயன் தி. மு. க.

21—8—54 மாலை 6 மணிக்கு செயற்குழுக் கூட்டம் புதுவை என். சுப்பிரமணியம் தலைமையில் நடைபெற்றபோது, பொருளாளர் பி. கே. கோவிந்தசாமி சில குண்டர்களால் தாக்கப்பட்டது பற்றி விசாரித்தும், கழக முதல் ஆண்டு நிறைவு விழாவை அக்டோபர் இறுதியில் நடத்தவென்றும், அதற்கு தோழர் கே. லோகநாதன், ஆர். ஆறுமுகம், ஏ. என். இராமசாமி, பி. கே. கோவிந்தசாமி, புதுவை. என். சுப்பிரமணியம் கொண்ட குழுவு ஒன்றும் தேர்ந்தெடுத்த முடிவு செய்யப்பட்டது. தீர்மானங்கள் பல நிறைவேற்றப்பட்டன.

## கம்பம் தி. மு. க.

26—8—54 மாலை 4 மணிக்கு கார்நிமதி நிலையத்தில் தோழர் இராமசாமி தலைமையில் தி. மு. கழக செயற்குழு கூட்டம் நடைபெற்றது. கூட்டத்தில், கம்பம், கூடலூர், சுருளிப்பட்டி, நாராயணத்தேவன்பட்டி, காமயகவுண்டன்பட்டி, அணைப்பட்டி, இராயப்பன்பட்டி, ஆனைமலையன்பட்டி, அனுமந்தன்பட்டி, பூசாரி கவுண்டன்பட்டி, பிதுப்பட்டி, உத்தமபுரம் முதலிய இடங்களைச் சேர்ந்த 60-க்கு மேற்பட்ட தோழர்கள் கலந்துகொண்டனர். காஞ்சி-கல்யாணசுந்தரம் குமரர் மறைவுக்கு அனுதாபமும் திருவாங்கூரில் நடைபெற்ற துப்பாக்கிப்பிரயோகத்தில் உயிர்நீத்த தோழர்களுக்கு அனுதாபமும் தெரிவித்துக் கொண்டதுடன் மற்றும், இயக்க சம்பந்தமான பல தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன.

## குஞ்சாண்டியூர் தி. மு. க.

துவக்கவிழா போதுக் கூட்டம்

23—8—54 மாலை 6-30 மணியளவில் மேற்படியூர் துவக்க விழா பொதுக் கூட்டம் மாரியம்மன் கோவில் மைதானத்தில், தோழர் கே. கே. ராமசாமி அவர்கள் தலைமையில் நடைபெற்றது. தோழர்கள் மே. க. வெங்கடாசலம், மடத்துப்பட்டி வெங்கடாசலம், மேட்டூர் அ. பாலு, க. கு. சின்னசாமி ஆகிய தோழர்கள் கழகக் கொள்கைகளைப் பற்றிப் பேசிய பின்னர், தோழர் சி. பி. சிற்றரசு சமுதாயக் கொள்கைகளைப் பற்றி விளக்கவுரையாற்றினார். பின்னர், திருவாங்கூரில் நடைபெற்ற துப்பாக்கிப் பிரயோகத்தைக் கண்டித்தும், இறந்தவர்களுடைய குடும்பங்களுக்கு நஷ்டஈடு தரக் கோரியும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

## பம்பாய் தி. மு. கழக மாநாடு செ. கு. கூட்டம்

பம்பாய் தி. மு. கழக முதல் மாநாட்டுச் செயற்குழுக் கூட்டம், தாராவி 'குடி அரசு' நிலயத்தில் 13—8—54 இரவு 8 மணியளவில், தோழர் வள்ளிநாயகம் தலைமையில் நடைபெற்றபோது, மாநாடு விரைவில் நடைபெறுவதற்கான வேலைகள் குறித்து ஆலோசிக்கப்பட்டன.

★

## "முயற்சி" வெளியீட்டு விழா

பம்பாய் தி. மு. கழகச் சார்பில், தாராவி 'குடி அரசு' நிலயத்தில் 15—8—54 மாலை 6 மணியளவில், தோழர் என். வள்ளிநாயகம் தலைமையில் 'முயற்சி' சிறப்பு மலர் வெளியீட்டு விழாவும் நடைபெற்றது.

தோழர் என். தியாகராசன் கூட்டத்தை துவக்கிவைத்துப் பேசினார். தோழர்கள் ஏ. என். பெருமாள், பி. என். செல்லையா, த. மு. பொற்கோ, கு. ஆ. சொல்லழகன் ஆகியோர் கையெழுத்தேடுகளின் அவசியம், அமைய வேண்டிய முறைகள் பற்றிப் பேசினர்.

## சிலையம்பட்டி தி. மு. க.

21—8—54ல் மேற்படி கழகத்தினரால், தோழர் மீரான் தலைமையில் "நினைத்தப்பார்" என்ற நாடகம் நடத்தப்பட்டது.

## செங்கமேடு தி. மு. கழகம்

13—8—54 இரவு 7 மணியளவில், பொது உறுப்பினர் கூட்டம் நடைபெற்றபோது, கழக நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்: செயலாளர்: தொ. பிச்சமுத்து; துணைச் செயலாளர்: ஆ. தங்கமணி; பொருளாளர்: ஆ. சாமிக்கண்ணு; மாவட்டப் பிரதிநிதி: வே. ஆறுமுகம்; மற்றும் 15 பேர் செயற்குழு உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

# செய்திச் சுருள்

★

## மஜீத் நினைவு மன்ற கொடியேற்று விழா

தூத்துக்குடி, ஆக. 23—

21—8—54 காலை 7 மணிக்கு மஜீத் நினைவு மன்ற கொடியேற்று விழா, ரகமதுல்லாபுரத்தில் நடைபெற்றது. தோழர் எம். இரத்தினம் தி. மு. கழகக் கொடியை ஏற்றிவைத்து, மஜீத்தின் தியாகங்களைப் பற்றிப் பேசினார்.

## திருச்சி நகர தி. மா. மு. கழகம்

கழக உறுப்பினர்கள் கூட்டம் 24-8-54ல் நடைபெற்றபோது, செயற்குழு தேர்ந்தெடுக்கப்பட்டது; ஆண்டு விழாவை அக்டோபர் இரண்டாம் வாரத்தில் நடத்துவதெனவும், காஞ்சி-கல்யாணசுந்தரம் அவர்களின் திருமகனார் மறைவுக்கு அனுதாபம் தெரிவித்தும், கவர்னர் சம்பளக் குறைப்புப் போராட்டத்திற்கு ஆதரவு தெரிவித்தும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டது.

## பாண்டியன் நினைவுப் படிப்பகம் திறப்பு விழா

இராமேஸ்வரம், ஆக. 27—

29—7—54ல், பாண்டியன் நினைவுப் படிப்பகம் திறப்புவிழா தோழர் என். அனந்த் தலைமையில் நடைபெற்றது. தோழர்கள் கே. என். பூமிநாதன், என். தியாகராசன், ஏ. காசிம்முகமது சொற்பொழிவாற்றினர்.

## திண்டுக்கல் நவதானிய வியாபாரிகள் சங்கம்

19—8—54 இரவு 8 மணிக்கு சங்க 5-வது நிர்வாகக்குழு கூட்டம் தோழர் கா. சுப்பிரமணியம் தலைமையில் நடைபெற்றபோது, விரைவில் பொதுக்கூட்டமொன்று நடத்தவும், அதற்கென குழு ஒன்று நியமித்ததுடன், பல தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன.

## தமிழ் மாணவர் வெற்றி!

குடந்தை அரசினர் கல்லூரி மன்றத்தின் அவைத் தலைவராக (Speaker of the College Union) தோழர் என். சி. பன்னீர்செல்வம் எனும் சந்தான கிருட்டிணன் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்.

தேர்தல் முடிவு அறிவிக்கப்பட்ட அன்று மாணவத் தோழர்கள் தோழர் செல்வத்தை யானை மீதமர்த்தி ஊர்வலம் வந்தனர்.

இக்கல்லூரியின் நூற்றாண்டு வாழ்வில் சிறப்புத் தமிழ் பயிலும் மாணவர் சபாநாயகராகியுள்ளது இதுவே முதன் முறையாகும்.

## கீழப்பாலூர் தி. மு. க.

சமீபத்தில் நடைபெற்ற கழக உறுப்பினர் கூட்டத்தில் இவ்வூர் பஞ்சாயத்து போர்டு வாசகசாலையில் முற்போக்கு பத்திரிகைகள் வாங்கப் போர்டு பஞ்சாயத்து போர்டாரைக் கேட்டு தீர்மானம் நிறைவேற்றி அனுப்பப்பட்டது.

* * *

21—8—54ல் தி. மு. கழக ஆதரவில், தோழர் அரு. இராமநாதனை பொறுப்பாளராகக் கொண்ட மறுமலர்ச்சி முதியோர் பாடசாலை ஒன்று ஆரம்பிக்கப்பட்டது.

## புதுவை தி. மு. கழகம்

22—8—54 காலை கழகத் தேர்தல் நடைபெற்றபோது, நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்: செயலாளர்: ச. சிவப்பிரகாசம்; துணைச் செயலாளர்: செ. கோவிந்தராசன்; பொருளாளர்: கோ. பாண்டியன்; மற்றும் 12 பேர் செயற்குழு உறுப்பினர்களாக தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## பகுத்தறிவு மன்ற படிப்பகம் துவக்கம்

22—8—54ல், நில்லியில், தோழர் பி. வி. ராமலிங்கம் தலைமையில் பகுத்தறிவு மன்றம் என்ற படிப்பகம் துவக்கப்பெற்று நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்:— தலைவர்: சி. ஆ. நடனம்; செயலாளர்: கோ. தட்சிணாமூர்த்தி; துணைச் செயலாளர்: முத்து சம்பந்தன்; பொருட் காப்பாளர்: சி. மு. சண்முகம்; செயற்குழு உறுப்பினர்கள்: மு. இராமச்சந்திரன், மா. கை. இராமலிங்கம், அ. தியாகராசனர், இரா. கோவிந்தராசன், செ. பழனி, லெ. சித்தராமன், மு. கலியபெருமாள், அ. சு. இராசமாணிக்கம், கோ. கலியவரதன், கே. டி. ராமாநுசம்.

## மகிழ்ச்சி மன்றம்

பாலையம்பட்டியில், மகிழ்ச்சி மன்ற தேர்தலும், துவக்க விழாவும் 22—8—54 மாலை 5 மணிக்கு சுதந்திர தையல் நிலயத்தில் நடைபெற்றது. அதுசமயம் சிறார்களுக்கு இனிப்பு வழங்கப்பட்டது. தோழர்கள் சங்கரலிங்கம் செயலாளராகவும், கா. சுப்பையா துணைச் செயலாளராகவும், மு. பொன்விருளன் பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## திருமணம்

★

22—8—54 காலை 9 மணியளவில் தெ. ஆ. மாவட்டம் கண்டமங்கலத்தை அடுத்த இராசபுத்திரபாளையத்தில், ஏ. கிருஷ்ணமூர்த்தி தலைமையில் தோழர் முத்தையன்—தோழியர் அனந்தாயி திருமணம் சீர்திருத்த முறையில் நடைபெற்றது. முதலில் மணமக்கள் மாலை மாற்றிக் கொண்டனர். பின்னர் தாலி அணிவிக்கப்பட்டது. தோழர் ஆ. பழனிச்சாமி சிறப்புரையாற்றினார். தலைவர் முடிவுரை கூறியதும், மணமக்களுக்கு அன்பளிப்பு அளிக்கப்பட்டது. இதை முன்னிட்டு மணமக்களின் சார்பில் 'நம் நாடு' வளர்ச்சிக்கு 1 அளிக்கப்பட்டது — வரப்பெற்றோம்—நன்றியுடையது-பொறுப்பாளர்.

• • •

15-8-54ல் திருவண்ணாமலை கீழ்நாத்தூர் ஆதிதிராவிட தெருவில் தோழர் வி. குமாரசாமி தலைமையில் தோழர் நாகராசன்—தோழியர் சரோசா சீர்திருத்தத் திருமணம் நடைபெற்றது. தோழர்கள் வடிவேலு, டி. என். சந்தானம் சிறப்புரை வழங்கினர். இதன் நினைவாக 'நம் நாடு' வளர்ச்சிக்கு 1 அன்பளிக்கப்பட்டது — வரப்பெற்றோம்— நன்றியுடையது — பொறுப்பாளர்.

## மறைவு

29—7—54 அன்று, குடந்தை தி. மு. கழக உறுப்பினர் தோழர் கா. சுப்பிரமணியம் அவர்களின் தலைவியார் தோழியர் ராஜலட்சுமி இயற்கை எய்தினார் என்பதை வருத்தத்துடன் குடந்தை தி. மு. க. செயலாளர் அறிவிக்கிறார்.

1953-ம் ஆண்டு இறுதியில் இந்தியக் கப்பல்களின் மொத்த நிறை 4,35,300 டன்னாக இருந்தது; இதில் கரைபோக்கு கப்பல்கள் 2,57,217 டன்; வெளி நாட்டு வர்த்தகத்தில் ஈடுபட்டுள்ள கப்பல்கள் 1,78,083 டன்; முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின்கீழ் இந்தியக் கப்பல்களின் நிறையை 6,00,000 டன்னாக பெருக்கத் திட்டமிடப்பட்டுள்ளது.

## உழைப்பைத் திருடும் 'வெறிநாய்கள்'

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

கிறது. அந்த வெறி நாய்கள் எந்த உருவில் வந்தாலும்—டாட்டா - டால்மியா உருவில் வந்தாலும், அழகப்ப செட்டியார் - அன்னபூர்ண முதலியார் உருவில் வந்தாலும்—ஒழிக்கப்பட்டாக வேண்டும் எனக் கூறுகிறது!"

என்று திருவெண்ணெய் நல்லூர் தி. மு. கழக முதலாண்டு விழாவில் சொற்பொழிவாற்றுகையில் தி. மு. கழகப் பொதுச் செயலாளர் அண்ணாதுரை அவர்கள், நம் உழைப்பு யார் யாரால் எங்கெந்த வகையில் சுரண்டப்படுகிறது என்பதையும், இந்த நாட்டு வளங்கள் எத்தனை என்பதையும் கூறி, அத்தனை வளங்களிலிருந்து நாம் வாழ முடியாதவர்களாயிருப்பதின் காரணங்களையும் புள்ளி விவரங்களுடன் விளக்கிப் பேசினார்கள்.

"திராவிட நாடு திராவிடர்க்காக வேண்டுமென்னும் உயரிய லட்சியம் இந்நாட்டு மக்களின் நல்வாழ்விற்கான ஒரே திட்டமாக இருக்கிறது என்பதையும் குறிப்பிட்டுவிட்டு, அந்த லட்சியம் ஈடேற வலு மிகுந்த போராட்டங்களில் கலந்துகொண்டு, உயிரையும் திரணமாக மதித்துள்ள இளைஞர்கள் பலர் இருக்கிறார்கள் என்பதை எடுத்துக் காட்டி, அந்த விடுதலைப் போரில் பங்கு பெற பலதுய் வர வேண்டுமெனக் கேட்டுக்கொண்டார்.

## கழகக் கூட்டம்

### துறையூர்

அரண்மனை பிள்ளையார் கோயில் திடலில்

31—8—54 மாலை 6 மணிக்கு

தலைவர்:

பி. அரங்கசாமி, எம். எல். ஏ.

பேசுவோர்:

சி. என். அண்ணாதுரை

அ. பொன்னம்பலனார்

* * *

31—8—54 மாலை 3 மணிக்கு துறையூர் பஞ்சாயத்து போர்டார் பொதுச்செயலாளர் அண்ணாதுரை அவர்கட்கு வரவேற்பு அளிப்பார்கள்.

1. இந்தியாவில் சுமார் 7 40,00,000 ஏகரா நிலத்தில் நெல் சாகுபடி செய்யப்பட்டு வருகிறது. இதிலிருந்து சுமார் 3,10,00,000 டன் நெல் கிடைத்து வருவதாக மதிப்பிடப்பட்டிருக்கிறது.

## எதிர்பாருங்கள்!

திராவிட இசைக்குயில் P. S. செல்வா நடிக மன்னன் P. S. கலைத்தூதன் குழுவினராக, கிளை கழக வளர்ச்சிக்காகவும், பிரச்சாரத்திற்காகவும் வெற்றிப் பாதையிலே கலைப் பயணம் செய்கிறார்கள். 31—8—54-ல் அதிராமப்பட்டினத்தில் 'தனியவன்?' என்கிற நாடகத்திலும், 5-9-54-ல் சேலத்தில் 'தனியவன்?', 'இரத்தக் கறை' என்கிற இரு நாடகங்களிலும், 12-9-54-ல் சாத்தூரில் 'இரத்தக் கறை' என்கிற நாடகத்திலும் தோன்றுகிறோம். நிர்வாகி, பாண்டியன், தமிழ்ச் செல்வி அரங்கம். கான்பாளையம் 2-ம் வீதி, மதுரை

# நான்கு பேர் மந்திரியாவதால் நாட்டு மக்களுக்கு வாழ்வு கிடைப்பதில்லை

## நலிந்தோர் வாழ்வு பெற தி. மு. கழகம் பாடுபடுகிறது

பொதுச் செயலாளர் அண்ணாதுரை அவர்கள், சொற்பொழிவின் ஆரம்பத்தில் குறிப்பிட்டதாவது:—

"தி. மு. கழகம், இன்று, ஓங்கி வளர்ந்திருக்கிற ஒரு மக்கள் சக்தியாக விளங்குகிறது. இந்த சிறிய ஊரான திருவெண்ணெய் நல்லூரைப் போன்றே சிற்றூர்களிலும், பேரூர்களிலும், நாடெங்கணும் தி. மு. கழகக் கொள்கைகளையும், இலட்சியத்தையும் தெரிந்துகொள்வதற்காக, ஆயிரக்கணக்கில் மக்கள் கூடுகின்றார்கள். இந்த மகத்தான வளர்ச்சியை தி. மு. கழகம் எப்படிப் பெற்று வருகிறது?

இந்த வளர்ச்சிக்கு யார் காரணம்? எங்களின் தனிப்பட்ட சக்தியா என்றால், நிச்சயமாக இல்லை.

ஏதேனும் ஒரு மதம் தோன்றினால், அந்த மதத்தை ஒரு பெரிய மகான் ஆவாக்கி வைப்பார்! அந்த மகானின் மகிமை கருதி மக்களும் அந்த மதத்தை ஏராளமான அளவில் பின்பற்றுவார்கள்.

காங்கிரஸ், காந்தியாரின் தலைமையைக் கொண்டது; அந்த மகாத்மாவின் தலைமையைப் பெற்றிருந்த காரணத்தால், காங்கிரஸ், மக்களால் பெரும் அளவில் பின்பற்றப்பட்டது.

ஆனால் எங்களைப் போன்றவர்கள் ஏதேனும் இயக்கம் ஆரம்பித்தால், அந்த இயக்கத்தில் லட்சியத்தில், அந்த லட்சியத்தை ஈடேற்றுவதற்கான கொள்கையில் உண்மை இருந்தாலன்றி மக்கள் பின்பற்றமாட்டார்கள்.

'அந்த லட்சியமும், கொள்கைகளும் நமக்கு நல்வாழ்வு தரும் வல்லமை உடையன,' என்ற நம்பிக்கையை மக்கள் பெற்றிருந்தாலன்றி, அந்த இயக்கம் வளர முடியாது; மக்களின் ஆதரவைப் பெற்று வலுவடைய முடியாது.

இன்று, தி. மு. கழகம் ஓர் மாபெரும் மக்கள் சக்தியாக வளர்ந்து வலுவடைந்திருப்பதற்குக் காரணமே அதன் லட்சியத்திலும், கொள்கையிலும், மக்களின் நல்வாழ்வுக்கான வழி வகைகள் உள்ளன என்பதினால்தான்!

தி. மு. கழகம், யார் யாருடைய வாழ்விலே ஏழ்மை இருக்கிறதோ, யார் கண்களில் ஒளி இல்லையோ, யாரார் பிற்படுத்தப்பட்டவர்களாக இருக்கிறார்களோ அவர்களின் நன்மைக்காக அவர்களுக்கு வாழ்வு தருவதற்காகப் பாடுபடுவதற்கென்று தன்னைத் தானே அவர்களிடம் ஒப்படைத்து விட்ட ஒரு இயக்கம்.

இந்த தென்னாற்காடு மாவட்டத்தில் வன்னியர்கள் பிற்பட்ட வகுப்பினராய் இருக்கிறார்கள். இந்த தமிழ் நாட்டிலுமுள்ள மக்களில் பெரும்பான்மையினர் நாடார்களாய், நாயுடுகளாய், வன்னியர்களாய், மறவர்களாய், தேவர்களாய்—இப்படியாய்ப் பிரிந்து, பிற்பட்ட நிலையில் இருப்பதைப் பார்க்கிறோம்.

இப்படிப் பிற்பட்ட மக்கள் தங்கள் தங்கள் முன்னேற்றத்திற்காக கட்சிகளும் சங்கங்களும் வைத்திருக்கிறார்கள்.

**ஆனால் ஒரு பிற்பட்ட சமூகத்தின் தலைவருக்கு மந்திரி பதவி கிடைத்து விட்டதாலேயே, அந்த சமூக மக்களின் வாழ்வில் முன்னேற்றம் தோன்றி விடாது!**

காமராசர் முதன் மந்திரியாயிருப்பதாலேயே, நாடார் சமூக மக்கள், 'நமக்கு எல்லாம் கிடைத்துவிட்டது.' என்றெண்ணிவிட முடியுமா? பக்தவத்சலம் மந்திரியாயிருப்பதாலேயே, 'முதலியார் சமூக மக்கள் எல்லாம் முன்னேறி விட்டார்கள்,' என்று சொல்லிவிட முடியுமா?

அதைப் போலவே தான் கனம் ராமசாமி படையாச்சியார் மந்திரியாகிவிட்டிருப்பதாலேயே வன்னிய மக்கள் நன்மை அடைந்து விட்டதாகக் கொள்ள முடியாது!

தோழர் கோவிந்தசாமியோ அல்லது நானோ மந்திரியாகி விடுவதாலேயே நாட்டு மக்களின் வாழ்வில் வளம் தோன்றிவிட்டதெனக் கொள்ள முடியாது.

**ஒரு நாட்டு மக்கள் வாழ்வதும், தாழ்வதும் அந்த நாட்டில் சமூகத் தலைவர்களிலே நான்கு பேருக்கு மந்திரி பதவி கிடைப்பதில் இல்லை!**

கனம் ராமசாமி படையாச்சி அவர்கள், வன்னிய குல முன்னேற்றத்திற்கென ஒரு இலாகா அமைக்கப்பட்டு, அதற்கு மந்திரியாகி இருந்தால்கூட, அதில் அர்த்தம் இருக்க முடியும்; ஆனால் அவர் மந்திரியாகி இருப்பது நிர்வாக இலாகாவிற்கு; இந்த இலாகாவினால் வன்னிய மக்களுக்கு நன்மை என்ன செய்துவிட முடியும்?

அப்படி ஒரு வன்னிய குல முன்னேற்ற இலாகாவிற்கு மந்திரியாகியிருந்தால் வேண்டுமானால், கனம் ராமசாமியார், எங்கள் மீது கோபப்படுவதிலே நியாயத்தோடு பொருளும் இருக்க முடியும்! இல்லையே?

எனவேதான், யாரானாலும் சிலர் மந்திரியாகி விடுவதினாலேயே மக்களுக்கு வாழ்வு கிடைத்துவிடாது என்று நாங்கள் சொல்கிறோம்."

## நீண்ட கதை......

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

யது குறிப்பிடத்தக்கது.

இவற்றை மனத்தில் உருவாக்கிக்கொண்டால் திரு—ஜோசி மாவில அமைப்பின் நிரந்தர நிழ்ச்சியை நாம் புரிந்து கொள்ள முடியும்.

(பின்னும் வரும்)

## திருக்குறள் வகுப்பு

31—8—54 பகல் 2½ மணிக்கு சென்னை, பெத்துநாய்க்கன் பேட்டை, முத்தியாலுதெரு, 15-ம் எண்ணுள்ள இல்லத்தில் தாய்மார் கழகச் சார்பில் திருக்குறள் வகுப்பு நடைபெறும். 'நீத்தார் பெருமை' குறித்து தோழர் மயிலை சிவமுத்து, தோழியர் ஜோதிலக்ஷ்மி ஆகியோர் பேசுவர்.

# காமராசரை பட்டம் தாணு சந்திப்பார்!

## திரு—தமிழர் கிளர்ச்சி பற்றி பேச்சு

### எல். எஸ். கரையாளர் அறிவிப்பு

திருவனந்தபுரம், ஆக. 29—தென் திருவிதாங்கூரில் சுற்றுப் பயணம் செய்துவிட்டு, பின்னர் தமிழ் நாடு காங்கிரஸ் தலைவர் எல். எஸ். கரையாளர் திருவனந்தபுரம் வந்து சேர்ந்தார். அவர் இன்று மாலை திரு—கொச்சி முதல் அமைச்சர் பட்டம் தாணு பிள்ளையைச் சந்தித்துப் பேசினார்.

பத்திரிகை நிருபர்களிடம் அவர் பேசுகையில், பட்டம் தாணு பிள்ளையுடன், தான் மணிக்கு 2½ மணி நேரம் பேசியதாகக் கூறினார்.

விளவங்கோடு, கல்குளம் தாலுகாக்களில் பீதி நிறைந்த அசாதாரண நிலைமை ஏற்பட்டுள்ளது. அப்பகுதிகளிலிருந்து போலீஸ் படையை வாபஸ் பெறுமாறும், தென் திருவாங்கூர் பகுதிகளில் சாதாரண நிலை ஏற்பட என்ன செய்ய வேண்டுமோ அவையனைத்தையும் செய்யுமாறும், கரையாளர், பட்டம் தாணு பிள்ளைக்கு யோசனை கூறியுள்ளாராம்.

தென் திருவிதாங்கூரில் நடைபெறும் திரு.—த. நா. காங்கிரஸ் கிளர்ச்சி பற்றி, பேச்சு வார்த்தைகள் நடத்த, சென்னை முதல் அமைச்சர் காமராசரை சந்திக்க வருமாறு பட்டம் தாணு பிள்ளையை அழைத்ததற்கு, அவர் இணங்கியதாகத் தெரிகிறது.

பட்டம் தாணு பிள்ளை டில்லியிலிருந்து திரும்பிவரும்பொழுது செப்டம்பர் 8-ம் தேதிவாக்கில் சென்னையில் காமராசரை சந்திப்பார் என்று கரையாளர் கூறினார்.

# தனி மனிதனுக்காக ஒரு...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

தெ. ஆ. மாவட்டத்தில் கோழிய பெட்டியே கிடையாதே! எல்லாம் மாடாக மாறிவிட்டனவே! கோழியை மாடு மிதித்துக் கொன்றுவிட்டதே!—இதெல்லாம் வன்னியருக்குச் செய்யும் நன்மையா?

நிலைசீர்திருத்த மசோதா—அதாவது, தரிசு நிலங்களை ஏழை விவசாயிகளுக்குப் பங்கிட்டுக் கொடுக்கும் அதிகார மளிக்கும் மசோதா—சட்டசபையில் வந்த காலத்தில், கனம் ராமசாமி படையாச்சியும், அவரது சகாக்களும் அதை எதிர்த்து ஓட்டளித்திருக்கிறார்கள். இதுதான் ஏழை வன்னியருக்குச் செய்யும் நன்மையா?

ஏழை விவசாயிகள் வாங்கியிருக்கிற கடன்களை வசூல் செய்வதை ஒத்திவைக்கவேண்டும் என்ற மசோதாவையும் எதிர்த்து ஓட்டளித்திருக்கிறார்கள், கனம் ராமசாமி படையாச்சியும், அவரது சகாக்களும்! இதுதான் ஏழை வன்னியருக்குச் செய்யும் நன்மையா? இதுதான் மந்திரியானதின் மகிமையா?

வருகிற ஜில்லா போர்டு தேர்தலில், முன்பு போன்று, பல சின்னங்களுக்கும் தனித்தனி ஓட்டுப் பெட்டி இருக்காது; ஒரே பெட்டி ஓட்டுச் சீட்டில்தான் சின்னங்கள் அச்சிட்டிருக்குமாம். அதில் ஓட்டுப்போடுபவர் தான் விரும்பும் சின்னத்தின் அருகே, பென்சிலால் கோடிட்டுக் காட்ட வேண்டுமாம்!

இம்மாதிரி, பழைய இரகசிய ஓட்டு முறை ஒழிக்கப்பட்டு, இந்தப் புதிய முறையினால், பலர் ஓட்டுச்சாவடிக்கே செல்லப் பயப்படுகிற நிலை வரப்போகிறது.

நாற்றுக்கு 90 பேர் தற்குறிகளாயிருக்கிற வன்னியர்களுக்கு, இந்தப் புதிய முறை தேர்தல் நன்மையைச் செய்யக் கூடியதா? இதுவும் ராமசாமிப் படையாச்சியார் மந்திரியான பிறகு புகுத்தப்பட்டதுதான்!

இவை எல்லாம் வன்னியருக்குச் செய்யும் நன்மைதானா என்று, பெரும்பான்மை வன்னியராக வாழும் இப்பகுதி மக்களே! நீங்கள் வரும் ஜில்லா போர்டு தேர்தலில் இவற்றிற்கு ஒரு நல்ல முடிவு கூறுங்கள்."

## பிரெஞ்சிந்தியா

பிரெஞ்சு தேசிய சட்டசபை, பிரெஞ்சு இந்தியத் திட்டங்களின் எதிர்காலம் பற்றி பேச்சு வார்த்தைகளைத் தொடர்ந்து நடத்த அனுமதித்தது.

பிரெஞ்சிந்தியாவில் உள்ள பொருளாதார, பண்பாடுகளைப் பாதுகாக்கும் வகையில் அந்தப் பேச்சு வார்த்தைகள் இருக்க வேண்டுமென்று வற்புறுத்தியது.

ஒரு கம்யூனிஸ்டு உறுப்பினரும், சோஷலிஸ்டு உறுப்பினர் ஒருவரும் பிரெஞ்சிந்தியப் பகுதிகள் இந்தியாவுக்கு மாற்றப்பட வேண்டுமென்ற விவாதத்தின் போது பேசினார்கள் என்று தெரிகிறது.

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தாதர் இ. எம். வெங்கடேசன், எம். ஏ. அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிட்டு பெத்து (நீ., சூளை) நாராயண செட்டித் தெரு (மாஷாப்பேட்டை) வெளியிடப்படுகிறது. ஆசிரியர்: சி. என். அண்ணாதுரை எம். ஏ.

